உ

சிவமயம்.

# சிவகவசம்.

# சத்திகவசம்.

# சரசுவதிதோத்திரம்.

# இலட்சுமிதோத்திரம்-உரை.

இவை

அஷ்டாவதானம் - பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1892வரு

உ

சிவமயம்.

# சிவகவசம்.



இந்தக்கவசம் பத்திராயுவென்னும் இராசகுமாரனுக்கு விடபமுனி அருளிச்செய்த தென்று நைமிசாரணிய முனிவருக்குச் சூத மகாமுனிவர் அநுக்கிரகித்தது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பங்கயத்தவிசின்மேவி
யிருந்துடற்பற்றுநீக்கி
பங்குறற்பூதசுத்தி
யடைவுடன்செய்தபின்னர்க்
கங்கையைத்தரித்தசென்னிக்
கற்பக தருவைச் செம்பொற்
கொங்கை வெற்பனைய பச்சைக்
கொடியொடு முளத்தில் வைத்தே. க

அகில நாயகனைய் ஞான
வானந்த ரூபியாகித்

தகடரு மனுவாய் வெற்பின்
    றேற்றமா யுயிரை யெல்லாந்
தகவுட னவனியாகித்
    தரிப்பவ னெம்மையிந்த
மகிதல மதனிற்றீமை
    மருவிடா தருளிற்காக்க. உ

குறைபுன லுருவங்கொண்டு
    கூழ்தொறும்பயன்களல்கித்
தரையிடையுயிர்கள்யாவுந்
    தளர்ந்திடாவண்ணங்காப்போ
னிரைநிரைமுகில்களீண்டி
    நெடுவரைமுகட்டிற்பெய்யும்
விரைபுனலதனுள்வீழ்ந்து
    விளிந்திடாதெம்மைக்காக்க. ந

கடையுகந்தன்னிலெல்லா
    வுலகமுங்கடவுட்டீயா
லடலைசெய்தமலைதாள
    மறைதரநடிக்குமீச

னிடைநெறிவளோதாபத்தி
    லெரிதருகுறைக்காற்றிற்
றடைபடாதெம்மையிந்தத்
    தடங்கடலுலகிற்காக்க. ௬

தூயகண்மூன்றினேடு
    சுடரும்பொன்வதனநான்கும்
பாயுமான்மழுவினேடு
    பகர்வரதாபயங்கண்
மேயதிண்புயங்களுன்கு
    மிளிருமின்னனையதேசு
மாயவதற்புருடனெம்மைக்
    குணதிசையதனிற்காக்க. ௭

மான்மழுசூலங்தோட்டி
    வனைதருமக்கமாலை
கூன்மலியங்குசந்தீத்
    தமருகங்கொண்டசெங்கை
நான்முகமுக்கணீல
    நள்ளிருள்வருணங்கொண்டே

யான்வருமகோரமூர்த்தி
தென்றிசையதனிற்காக்க. சா

திவண்மறியக்கமாலை
செங்கையோரிரண்டுந்தாங்க
வவிர்தருமிரண்டுசெங்கை
வரதத்தோடபயந்தாங்கக்
கவினிறைவதனநான்குங்
கண்ணொருமூன்றுங்காட்டுந்
தவளமாமேனிச்சத்தியோ
சாதன்மேற்றிசையிற்காக்க எ

கறைகெழுமழுவுமானு
மபயமுங்கண்ணிணும
மறைதருதொடையுஞ்செய்ய
வங்கைகளான்குமேந்திப்
பொறைகொணான்முகத்துமுக்கட்
பொன்னிறமேனியோடு
மறைபுகழ்வாமதேவன்
வடதிசையதனிற்காக்க. அ

அங்குசங்கபாலஞ்சூல
  மணிவரதாபயங்கள்
சங்குமான்பாசமக்கந்
  தமருகங்கரங்களேந்தித்
திங்களிற்றவளமேனி
  திருமுகமைந்தும்பெற்ற
வெங்களீசானதேவ
  னிருவிசும்பெங்குங்காக்க. ௯

சந்திரமவுலிச்சென்னி
  தனிநுதற்கண்ணனெற்றி
யைந்தருப்கன்கண்டொட்டோன்
  வரிவிழியகிலநாதன்
கொந்துணர்நாசிவேதங்
  கூறுவோன்செவிகபாலி
யந்தில்செங்கபோலந்தூய
  வைம்முகன்வதனமுற்றும், ௰

வளமறைபயிலுநாவ
  னுமணிநீலகண்டன்

களமடுபினாகபாணி
கையிலைதருமவாகு
இளர்புயந்தக்கன்யாகங்
கெடுத்தவன்மார்புதூய
வொளிதருமேருவில்லி
யுதரமன்மதனைக்காய்ந்தோன். கக

இடையிபமுகத்தோன்றாதை
யுந்திநம்பீசன்மன்னும்
புடைவளரணாகுபேர
மித்திரன்பொருவில்வாமம்
படர்சகதிசன்சானு
பாய்தருமிடபகேது
மிடைதருகணைக்காலெந்தை
விமலன்செம்பாதங்காக்க. கஉ

வருபகன்முதல்யாமத்து
மகேசன்பின்னிரண்டாம்யாமம்
பொருவறவாமதேவன்
புகன்றிடுமூன்றாம்யாமஞ்

செரும்லிமழுவாளங்கைத்
திரியம்பகனுலாம்யாமம்
பெருவலியிடபவூர்தி
பிணியறவினிதுகாக்க. கஉ

கங்குலின்முதல்யாமத்துக்
கலைமதிமுடித்தோன்காக்க
தங்கியவிரண்டாம்யாமஞ்
சானவிதரித்தோன்காக்க
பொங்கியமூன்ரும்யாமம்
புரிசடையண்ணல்காக்க
பங்கபினுலாம்யாமய்
கௌரிதன்பதியேகாக்க. கச

அனைத்துளகாலமெல்லா
மந்தகற்கடிந்தோனுள்ளுந்
தனிப்பெருமுதலாய்நின்ற
சங்கரன்புறமுந்தானு
வனப்புறநடுவுந்தூய
பசுபதிமற்றமெங்கு

நினைத்திடற்கரியநோன்மைச்
சதாசிவனிமலன்காக்க கரு

நிற்புழிப்புவனநாத
னேகுழிநிமலமேனிப்
பொற்புறுமாதிநாத
னிருப்புழிப்பொருவிலாத
வற்புதவேதவேத்ய
னருந்துயில்கொள்ளுமாங்கட்
டற்பரசிவன்வழிக்குச்
சாமளருத்திரன்காக்க. கசா

மலைமுதற்றுருக்கந்தம்மிற்
புராரிகாத்திடுகமன்னுஞ்
சிலைவலிவேடரூபன்
செறிந்தகானகத்திற்காக்க
கொலையமர்சுற்பத்தண்ட
கோடிகள்குலுங்கநக்குப்
பலபடிநடிக்கும்வீர
பத்திரன்முழுதுங்காக்க. கஎ

பல்லுளைப்புரவித்திண்டேர்
படுமதக்களிறுபாய்மா
வில்லுடைப்பதாதிதொக்கு
மிடைந்திடுமெண்ணில்கோடி
கொல்லியன்மாலைவைவேற்
குறுகலர்குறுகுங்காலை
வல்லியோர்பங்கன்செங்கை
மழுப்படைதுணித்துக்காக்க. கஅ

தத்துநீர்ப்புணரியாடைத்
தரணியைச்சுமந்துமானப்
கைத்தலைநெடியபாந்தட்
பஃறலையனைத்துந்தேய்ந்து
முத்தலைபடைத்ததொக்கு
மூரிவெங்கனல்கொள்சூலம்
பொய்த்தொழிற்கள்வர்தம்மைப்
பொருதழித்தினிதுகாக்க. கக

முடங்குளைமுதலாயுள்ள
முழுவலிக்கொடியமாக்க

ளடங்கலும்பிணாகங்கொல்க
வென்றிவையனைத்துமுள்ளந்
திடம்படநினைந்துபாவஞ்
செயுஞ்சிவகவசந்தன்னை
யுடன்படத்தரிப்பையானா
லலம்பொருகுவவுத்தோளாய். ௨௦

வேறு.

பஞ்சபாதகங்கள்போம்
பகைகண்மாய்ந்திடு
மஞ்சலின்மறலியு
மஞ்சியாட்செயும்
வஞ்சகநோயொழிந்திடும்
வறுமைதீர்ந்திடுந்
தஞ்சமென்றிதனைநீ
தரித்தல்வேண்டுமால். ௨௧

சிவகவசம் முற்றிற்று.



# வச்சிரபஞ்சரமென்னும்

# சத்திகவசம்.



தேவர்கள் தங்களுக்கு நேரிடுநாள் இடரிழைத்திருந்த துர்க்கனென்னும் அவுணனை உமாதேவியானவள் சங்கரித்து அவ்விடரை நீக்கியதுகண்டு, அத்தேவியை வணக்கஞ்செய்து துதிசெய்தது இக்கவசமென்றறிக.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அங்கையிற்கரகந்தாங்கும்
பிரமாணியருளினேடும்
துங்கமென்சென்னிகாக்க
வயிணவிதுகளிலாக
மெங்கணுங்காக்கசெய்ய
வேங்தெழிலுருத்திராணி
தங்குமெண்டிசையுமன்பு
தழைத்திடவினிதுகாக்க. ௧

கொன்றுணைச்சூலிசென்னி
மயிரினைக்குறித்துக்காக்க
மன்னுவெண்பிறைதாழ்சென்னி
வயங்கொளிநெற்றிகாக்க
பன்மயிர்ப்புருவநாளும்
பரிவொடுமுமையாள்காக்க
வென்னையாண்முக்கணீச
னிறைவிகண்ணிணைகள்காக்க. ௨

வயமிகுமிமயவல்லி
மூக்கினைமகிழ்ந்துகாக்க
செயையொடுவிசயைமேல்கீ
ழிதழிணைச்சிறந்துகாக்க
வயிலுடைச்சுருதிநாய
வஞ்செவிகாக்கதண்ணென்
பயின்மலருறையுஞ்செல்வி
பல்லிணையுவந்துகாக்க. ௩

சண்டிமென்கபோலங்காக்க
தவளநாண்மலரின்வைகு

மொண்டொடிநன்ஞுக்காக்க
விசயைமங்கலமற்றெவ்வாக்
கண்கவாநாடிகாக்க
காத்தியாயநியெஞ்ஞான்று
முண்டகமலரிற்றூய
முகத்தினைச்சிறந்துகாக்க. ௬

காளமுண்டிருண்டநீல
கண்டிமென்கழுத்துக்காக்க
கோளில்பூதாரசத்தி
சுவற்புறங்காக்ககூர்மி
னீளொளிச்சந்திகாக்க
வயிந்திரிநெறியிஞேடுந்
தோளினைகாக்கபத்மை
துணைமலரங்கைகாக்க. ௭

கமலைகைவிரல்கள்காக்க
விரசைகையுகிர்கள்காக்க
திமிரமுண்டொளிரும்வெய்யோன்
மண்டலத்துறையுஞ்செல்வி

யெமதிருவாகுழூலங்
காக்கவானவர்களேத்த
வமிர்தலகரிநாளுளு
மகன்மணிமார்பங்காக்க. ௬

தரித்திரியிதயங்காக்க
தயித்தியர்ச்செகுப்போண்மிக்க
கருத்தொடுமுலேகள்காக்க
கசத்தினிவிறைமைபூண்டோ
டிருத்தகுவயிறுகாக்க
திகழ்தபோகதிதன்னுள்ளத்
தருத்தியினுந்திகாக்க
வசைவலர்முதுகுகாக்க. ௭

கருதருவிகடைகாக்க
கடிதல்ம்பாமைவாய்ந்த
குருமணிச்சகனங்காக்க
குகாரணிகுய்யங்காக்க
வருடரவருமபாய
கந்தினியபானங்காக்க

செருளுடைவிபுலையென்றுஞ்
சிறப்புடைக்குறங்குகாக்க. அ

லளிதைமென்முழந்தாள்காக்க
விபற்சபைகணைக்கால்காக்க
களிதருகோளைவாய்ந்த
பரட்டிணைக்காக்கமிக்க
வளிகொள்பாதலத்திற்செல்வோ
ளணிகெழுபுறந்தாள்காக்க
யொளிநகம்விரல்கள்சந்திரி
யுக்கிரியுவந்துகாக்க. கூ

தலத்துறைமடந்தையுள்ளங்
காலிணைகாக்கதண்ணென்
மலர்த்திருமனையைக்காக்க
வயங்குகேந்திரதையோங்கி
யுலப்பில்கேத்திரங்கள்காக்க
பிரியகளையொழிவறாது
நலத்தருமக்கடம்மை
நன்குறக்காக்கவன்றே. க0

உயர்சநாதனியெஞ்ஞான்று
மொழிவறுமாயுள்காக்க
மயர்வறுசீர்த்தியாவு
மாதேவிகாக்கமிக்க
செயிரறுதருமம்யாவுந்
தநுத்திரிசிறந்துகாக்க
வியல்புடைக்குலத்தைவாய்ந்த
குலதேவியினிதுகாக்க. கக

சற்கதிபிரதைநல்லோ
ரியைபினைத்தயாவிற்காக்க
விற்கொடும்போரினீரில்
வெளியினில்வனத்திற்சூதி
விற்புதமதனிலோங்கு
சர்வாணிகாக்கவென்றுப்
பொற்றருமலர்கவேவிப்
புங்கவரோத்திறுரோ. கஉ

சத்திகவசமுற்றிற்று.



இந்தவச்சிரபஞ்சரத்தையாவர் செபித்தாலும், அவர்களுடைய தேகத்திலுண்டாகிய வெப்புநோயொழியும். எட்டுதரஞ் சலத்தில்அபிமந்திரித்து அதனை உட்கொண்டால் வயிற்றிலே பொருந்தியகுன்மஞ் சூலமுதலிய நோயனைத்தும் நீங்கும் இரவில் வழிநடக்கும்போது செபித்தால் பூதம்பேயிவைகள் தொடரமாட்டாவாம். பிள்ளையைப்பெறமாட்டாமல் வருத்தப்படுகின்றமாதருடையஅருகிலிருந்து செபித்தாலும் அல்லது நீரிலோதி உட்கொள்ளக்கொடுத்தாலும், விரைவிலே வருத்தநீங்கிப் பிள்ளைகளைப் பெறுவார்கள். யுத்தத்திலே செபித்தால், சத்துருக்கள்தோல்வி யடைவார்கள். சிறுபிள்ளைகளுக்கு நீரிலோதி உட்கொள்ளக் கொடுத்தால்,வியாதிகள் நீங்கும். இதை யாவரோதினலும், அவர்களைஉமாதேவி காப்பாற்றுவாள்.



சிவமயம்.

சகலகலா வல்லிமாலையென்னும்

# சரசுவதிதோத்திரம்.



வெண்டாமரைக்கன்றி
நின்பதந்தாங்கவென்
வெள்ளையுள்ளத்
தண்டாமரைக்குத்
தகாதுகொலோசக
மேழுமளித்
துண்டானுறங்க
வொழித்தான்பித்தாகவுண்
டாக்கும்வண்ணங்
கண்டான்சுவைகொள்
கருப்பேசகல
கலாவல்லியே.
நாடும்பொருட்சுவை
சொற்சுவைதோய்தர
நாற்கவியும்

பாடும்பணியிற்
பணித்தருள்வாய்பங்க
யாசனத்திற்
கூடும்பசும்பொற்
கொடியேகனதனக்
குன்றுமைம்பாற்
காடுஞ்சுமக்குங்
கரும்பேசகல
கலாவல்லியே, [௨]

அளிக்குஞ்செழுந்தமிழ்த்
தெள்ளமுதார்ந்துன்
னருட்கடலிற்
குளிக்கும்படிக்கென்று
கூடுங்கொலோவுளங்
கொண்டுதெள்ளித்
தெளிக்கும்பனுவற்
புலவோர்கவிமழை
சிந்தக்கண்டு
களிக்குங்கலாப

மயிலேசகல
கலாவல்லியே. ௩

தூக்கும்பனுவற்
றுவைதோய்ந்தகல்வியுஞ்
சொற்சுவைதோய்
வாக்கும்பெருகப்
பணித்தருள்வாய்வட
நூற்கடலுந்
தேக்குஞ்செழுந்தமிழ்ச்
செல்வமுந்தொண்டர்செந்
நாவினின்று
காக்குங்கருணைக்
கடலேசகல
கலாவல்லியே. ௪

பஞ்சப்பிதந்தரு
செய்யபொற்பாதபங்
கேருகமென்
னெஞ்சத்தடத்தல

ராதசெந்தன்னைநெடுந்
தாட்கமலத்
தஞ்சத்துவச
முயர்த்தோன்செந்நாவு
மகமும்வெள்ளைக்
கஞ்சத்தவிசொத்
திருந்தாய்சகல
கலாவல்லியே. ௩

பண்ணும்பரதமுங்
கல்வியுந்தீஞ்சொற்
பனுவலும்யா
னெண்ணும்பொழுதெளி
தெய்தநல்காயெழு
தாமறையும்
விண்ணும்புவியும்
புனலுங்கனலும்
வெங்காலுமன்பர்
கண்ணுங்கருத்து

நிறைந்தாய்சகல
கலாவல்லியே ௯

பாட்டும்பொருளும்
பொருளாற்பொருந்தும்
பயனுமென்பாற்
கூட்டும்படிநின்
கடைக்கணல்காயுளங்
கொண்டுதொண்டர்
தீட்டுங்கலைத்தமிழ்த்
தீம்பாலமுதந்
தெளிக்கும்வண்ணங்
காட்டும்வெள்ளோதிமப்
பேடேசகல
கலாவல்லியே. ௰

சொல்விற்பனமு'
மவதானமுங்கல்வி
சொல்லவல்ல
நல்வித்தையுந்தந்

தடிமைகொள்வாய்நளி
ஞசனஞ்சேர்
செல்விக்கரிதென்
ஞெருகாலமுஞ்சிதை
யாமைநல்கும்
கல்விப்பெருஞ்செல்வப்
பேறேசகல
கலாவல்லியே. அ

சொற்கும்பொருட்கு
முயிராமெய்ஞ்ஞானத்தின்
ருேற்றமென்ன
நிற்கின்றநின்னை
நினைப்பவர்யார்நிலர்
தோய்புழைக்கை
நற்குஞ்சரத்தின்
பிடியோடரசன்ன
நாணநடை
கற்கும்பதாம்புயத்

தாளேசகல
கலாவல்லியே. கூ

மண்கண்டவெண்குடைக்
கீழாகமேற்பட்ட
மன்னருமென்
பண்கண்டளவிற்
பணியச்செய்வாய்ப்படைப்
போன்முதலாம்
விண்கண்டதெய்வம்
பல்கோடியுண்டேனும்
விளம்பிலுன்போற்
கண்கண்டதெய்வ
முளதோசகல
கலாவல்லியே. க0

சரசுவதிதோத்திரம்-முற்றிற்று.



உ

சிவமயம்.

# இலட்சுமி தோத்திரம்

## மூலமும் - உரையும்.



மூவுலகுமிடரியற்று
மடலவுணனுயிரொழிய
முனிவுகூர்ந்த
பூவையுறழ்திருமேனி
யருட்கடவுளகன்மார்பிற்
பொலிந்துதோன்றித்
தேவருலகினும்விளங்கும்
புகழ்க்கொல்லாபுரத்தினிது
சேர்ந்துவைகும்
பாவையிருதாடொழுது
பழமறைதேர்குறுமுனிவன்
பழிச்சுகின்றான்.

## இதன்பொருள்.

மூவுலகும் - சொர்க்கமத்திய பாதலமென்னு மூன்றுலகத்திற்கும், இடர்-துன்பத்தை, இயற்றும்-செய்யும், அடல்-பலத்தையுடைய, அவுணன்-அசுரனாகிய விரணியனுடைய, உயிரொழிய-உயிர்நீங்க, முனிவுகூர்ந்த-சினமுற்ற, பூவையுறழ்-காயாம்பூவையொத்த, திருமேனி-திருமேனியையுடைய, அருட்கடவுள்-கிருபைமிக்க கடவுளாகிய திருமாலினது, அகல் - அகன்ற, மார்பில் - மார்பகத்து, பொலிந்துதோன்றி- விளங்கியிருந்து, தேவருலகினும்-கடவுளருலகினும், விளங்கு-விளங்கா நின்ற, புகழ்-கீர்த்தியையுடைய, கொல்லாபுரத்து-கொல்லாபுரமென்னு நகரத்தினிடத்து, இனிது-இனிதாக, சேர்ந்துவைகும்-எழுந்தருளியிருக்கும், பாவை-பாவைபோன்ற ஸ்ரீதேவியின், இருதாள்-இரண்டு திருவடிகளை, பழமறைதேர்-முதியவேதப் பொருளையுணர்ந்த, குறுமுனிவன்-அகத்தியமாமுனி

வர், தொழுது-வணங்கி, பழிச்சுகின்ருன்-து
திக்கின்ருன்—என்றவாறு. க

கொழுதியிசையளிமுரலுந்
தாமரைமென்பொகுட்டிலுறை
கொள்கைபோல
மழையுறழுந்திருமேனி
மணிவண்ணனிதயமலர்
வைகுமானே
முழுதுலகுமினிதீன்ற
வருட்கொம்பேகாகமல
முகிழ்த்தெந்நாளுங்
கழிபெருங்காதலிற்ருெழுவோர்
வினைதீரவருள்கொழிக்குங்
கமலக்கண்ணுய்.

(இ-ள்) அளி-வண்டுகள், கொழுதி - கோ
தி, இசைமுரலும்-இசையைப்பாடுகின்ற,தா
மரையினது, மென்பொகுட்டின்-மேன்மை

யாகிய பொகுட்டினிடத்து, உறை - வீற்றிருக்கும், கொள்கைபோலும் - தன்மைபோலும், மழையுறழும்-நீருண்டமேகத்தையொத்த, திருமேனி-திருமேனியை யுடைய, மணிவண்ணன்-மணிவண்ணனாகிய திருமாலினது, இதயமலர் - இதயகமலத்தில், வைகும்-வாசஞ்செய்யும், மானே-மான்போலும் விழியினையுடையாய், முழுதுலகும் - உலகமுழுவதையும், இனிது-இனிதாக, ஈன்ற-பெற்ற, அருட்கொம்பே-அருணிறைந்தகொம்பு போல்பவளே (நின்னை) கரகமலம்கரங்களாகிய தாமரைகளை, முகிழ்த்து-கூப்பி, நாளும் எந்நாளும், கழிபெருங்காதலின்- மிகப்பெரியகாதலினால், தொழுவோர்- வணங்குவோரது, வினைதீர-வினையொழிய, அருள்கொழிக்கும்-திருவருளைக் கொழிக்கின்ற, கமலக்கண்ணாய் - கமலம்போன்ற விழியினையுடையாய்—எ-று.

உ

கமலைதிருமறுமார்பன்
மனைக்கிழத்திசெழுங்கமலக்
கையாய்செய்ய
விமலைபசுங்கழைகுழைக்கும்
வேனிலான்றனையீன்ற
விந்தைதூய
வமுதகும்பமலர்க்கரத்தாய்
பாற்கடலுளவதரித்தோ
யன்பர்நெஞ்சத்
திமிரமகன்றிடவொளிருஞ்
செழுஞ்சுடரோயெனவணக்கஞ்
செய்வான்மன்றே.

(இ-ள்.) கமல்-தாமரைக்கமலத்தி விருப்பவளே, திருமறுமார்பன்-திருமறுமார்பனென்னுந் திருமாலினது, மனைக்கிழத்தி - மனைவியே, செங்கமலம் - செந்தாமரைப்பேன்ற, கையாய் - திருக்கரங்களையுடையாய், செய்ய - செவ்விதாகிய, விமலை - நின்மல சொரூ

பியே, பசுங்கழை- பசுமையாகிய கரும்பை, குழைக்கும்-வில்லாகவளைக்கும், வேனிலான் றனை-வேனிற்காலத்திற்குரிய மன்மதனை, ஈன்ற-பெற்ற, விந்தாய், தூய-பரிசுத்தமாகிய, அமுதகும்பம்-அமிர்தகலசம்போன்ற, கனதனத்தாய்-பருத்ததனத்தை யுடையாய், பாற்கடலுள் - திருப்பாற்கடலிடத்து, அவதரித்தோய்-திருவவதாரஞ் செய்தோய், அன்பர், அன்பரது, நெஞ்சம்-நெஞ்சத்தின் கண்ணுளதாகிய, திமிரம்-அஞ்ஞானமாகிய விருள்-அசன்றிட-அகல, ஒளியரும்- பிரகாசிக்கும், செஞ்சுடரோ-செழுமை தங்கிய ஒளியே, என-என்று, வணக்கஞ் செய்தான் - வணங்கினுர்—எ-று. (மன்-ஒ-அசை.) ௩

மடற்கமலநறும்பொகுட்டி
லாசிருக்குஞ்செந்துவர்வாய்
மயிலேமற்றுன்
கடைக்கணருள்படைத்தன்றே

மணிவண்ணனுலகமெலாங்
காவல்பூண்டான்
படைத்தனனான்முகக்கிழவன்
பசுங்குழவிமதிபுனைந்த
பரமன்றானுந்
துடைத்தனனின்பெருஞ்சீர்த்தி
யெம்மனோராலெடுத்துச்
சொல்லற்பாற்றோ.

(இ-ள்.) மடல்-இதழையுடைய, கமலம்-தாமரையினது, நறும்பொகுட்டில்- நறுவிய பொகுட்டினிடத்து, அரசிருக்கும்-ஆளுகை செய்துகொண்டிருக்கும், செந்துவர் வாய்-செம்மையாகிய பவளம்போலும் வாயினையுடைய, மயிலே-மயில்போல் பவளே, உன்-உனது, கடைக்கண்-கடைக்கண்ணினது, அருள்- அருளை, படைத்தன்றோ - பெற்றல்லவோ, கார்வண்ணன்-கரியநிறத்தை யுடைய திருமால், உலகமெலாம் - உலகமுழுவதும்,

காவல் பூண்டான்-இரட்சிக்குந் தன்மையை மேற்கொண்டான், நான்முகக்கிழவன்-நான்கு திருமுகங்களை யுடைய பிரமதேவன், பசுங்குழவி - பசுமையும் இளமையுமாகிய, படைத்தனன் - உண்டாக்கினன், மதிசந்திரனை, புனைந்த-தரித்த, பரமன்றானும் - பரமசிவனும், துடைத்தனன்- உலகத்தைசங்காரம்செய்கின்றான், (ஆதலால்) நின் - நினது, பெருஞ்சீர்த்தி - மிக்ககீர்த்தி, எம்மனோரால்- எம்போலியர்களால், எடுத்து-ஆராய்ந்தெடுத்து, சொல்லற்பாற்றோ-சொல்லும்பகுதியதோ-எ-று. (மற்று-தான்-அசை.) ௪

மல்லனெடும்புவியனைத்தும்
பொதுநீக்கித்தனிபுரக்கு
மன்னர்யாருங்
கல்வியினிற்பேரறிவிற்
கட்டழகினிகரில்லாக்
காட்சியோரும்
வெல்படையிற்புகைதுரந்து

வெஞ்சமரில்வாகைபுனை
வீரர்தாமு
மல்லிமலர்ப்பொகுட்டுறையு
மணியிழைநின்னருணோக்க
மடைந்துளாரே.

(இ-ள்.) மல்லல் - வளப்பத்தை யுடைய நெடும்புவியனைத்தும் - விசாலமாகிய வுலக னைத்தையும், பொதுநீக்கி - மற்றொருவர்க்கு ஞ்சுதந்தரமாதலைநீக்கி, தனிபுரக்கும்-தாமே தனிமையாகக்காக்கின்ற, மன்னர்தாமும்-அ ரசரும், கல்வியினில்-கல்வியிலும் பேரறிவி ல்-மிக்கவறிவிலும், கட்டழகில், நிறைந்தவ ழகிலும், நிகரில்லாத-தமக் கொப்பில்லாத, காட்சியோரும் - மதிப்பினையுடையோரும், வெல்-வெல்கின்ற, படையில் - சேனைகள்நி றைந்த போர்க்களத்தில், பகைதுரந்து - ப கையைக்கடிந்து, வெஞ்சமரில் - கடுமை யாகியபோரில், வாகை-வெற்றிமாலையை, பு னை-தரிக்கும், வீரர்தாமும்-வீரரும், அல்லிம

லர்-அக்கவிதழையுடைய தாமரையினது,பொ குட்டினிடத்து,உறையும்-எழுந்தருளியிருக் கும், அணியிழை-அழகாகிய திருவாபரணங் களையுடையாய், நின்-நினது, அருணோக்கம்- கிருபாநோக்கத்தை, அடைந்துளாரோ -பெற் றவர்களே-எ-று. (ஏகாரம் பிரிநிலைப்பொரு ட்டு-தாம்-இரண்டும் அசை.) ௫

செங்கமலப்பொலந்தாதிற்
றிகழ்ந்தொளிருமெழின்மேனித்
திருவேவேலை
பங்கணுலகிருடீரக்கு
மலர்கதிராய்வெண்மதியா
யமரர்கூட்டும்
பொங்கழலாயுலகளிக்கும்
பூங்கொடியேநெடுங்கானிற்
பொருப்பின்மண்ணி
லெங்குளைநீயவணன்றோ

மல்லல்வளஞ்சிறந்தோங்கி
யிருப்பதம்மா.

(இ-ள்.) செங்கமலம்-செந்தாமரையினது பொலம்-பொன்னிறமாகிய, தாதின்-மகரந் தம்போல, திகழ்ந்தொளிரும்-பிரகாசித்துவி ளங்கும், எழில்-அழகமைந்த, மேனி-திரு மேனியையுடைய, திருவே - திருமகளே, வேலை-கடலாற்சூழப்பட்ட, அங்கணுலகு-அ ழகாகிய விடமகன்ற வுலகத்தில், இருள்-பு றவிருளை, துரக்கும்-ஓழிக்கும், அலர்கதிரா ய்-விரிந்த கிரணங்களையுடைய வாதித்தனுகி யும், வெண்மதியாய் - வெள்ளியதிங்களாகி யும், அமரர்க்கு தேவர்கட்கு, ஊட்டும் - உ ண்பிக்கும், பொங்கழலாய் - மிகுந்ததீயாகியு ம், உலகளிக்கும்-உலகத்தைப்பாதுகாக்கும், பூங்கொடியே-பூங்கொடி போல்பவளே, நெ டுங்கானில்-பெரிய காட்டினிடத்தும், பொ ருப்பில்-மலையினிடத்தும், மண்ணில் - மண்

ணினிடத்தும்,எங்ஙனே நீ - நீயெங்கிருக்கின்றையோ, அவணன்றே - அவ்விடமன்றே மல்லல்வளம்-மிக்கவளம், சிறந்தோங்கி- சிறப்புற்றுயர்ந்து, இருப்பது - இருக்கின்றது-எ-று. (அம்மா-அசை.) ௬

என்றுதமிழ்க்குறுமுனிவன்
பன்னியொடுமிருநிலத்தி
லிறைஞ்சலோடு
நன்றுனதுதுதிமகிழ்ந்தோ
நான்மறையோயித்துதியை
நவின்றோர்யாரும்
பொன்றலரும்பெரும்போக
நுகர்ந்திடுவரீங்கிதனைப்
பொறித்தவேடு
மன்றன்மனையகத்திருப்பின்
வறுமைதருதவ்வையவண்
மருவல்செய்யாள்.

(இ-ள்.) என்று-இவ்வண்ணமாகக்கூறி, த தமிழ்க்குறுமுனிவன்- அகத்தியமாமுனிவர் பன்னியொடும் - தமது பத்தினியோடும், இ ருநிலத்தில்-இடமகன்ற வலகத்தின்கண், இ றைஞ்சலோடும்-வணக்கஞ்செய்த மாத்திரத் தில், நான்மறையோய் - நான்கு வேதங்களை யுடையோய், நன்று - நலமுடையது; உன து-உன்னுடைய, துதி-தோத்திரம், மகிழ்ந் தோம்-யாம் அதற்கு மூவந்தோம் (ஆதலால்) இத்துதியை - இந்தத்துதியை, நவின்றோர்- பாராயணஞ்செய்பவர்கள் யாரும் யாவரும், பொன்றலரும்-அழிவில்லாத, பெரும்போக ம்-மிக்க போகத்தை-நுகர்ந்திடுவர் - அனுப விப்பர், (இஃதன்றியும்) ஈங்கு - இவ்வுலகத் தின்கண், இதனை - இத்துதியை, பொறித்த வேடும்-எழுதப்பட்ட வேடும், மன்றல்-வள ம்பொருந்திய, மனையகத்து-இல்லத்தினிட

த்து, இருப்பின்-இருக்குமாயின், வறுமைத்
ரு-தரித்திரத்தைப்பயக்கும், தௌவை - மூ
தேவி, அவண் - அம்மனையிடத்து, மருவல்
செய்யாள்-அணுகாள்-எ-று. எ

இலக்குமிதோத்திரம்

மூலமும்-உரையும்,

முற்றிற்று.



